*“இவன் வேலையும் பறிபோச்சு... கல்யாணமும் நின்னுபோச்சு... இப்படி எத்தனையோ பேரு... இவங்களுக்கும் ஏதோ செய்யப் போறதாத்தான் சொன்னிங்க.. என்ன செய்து கிழிச்சிங்க?*

*அந்த மூதாட்டியின் குரல் கட்டிப் போனதால் இன்னொருத்தி தொடர்ந்தாள். “பார்வதி அதிகாரி பயலுககிட்ட சொன்னவள்தான்... அவளை அப்படி சொல்ல வச்சது நாங்கதான். இந்த மலைக்கு நாங்க கூலி ஆட்கள் இல்ல. சொந்தக்காரிங்க... சங்கத்துக்கு சந்தா கட்டுற மெம்பருங்க. இப்பவே ரெண்டுல ஒண்னு தெரிஞ்சாகனும்”*

*ஆங்காங்கே சிதறி நின்ற கூட்டம், ஒருவரோடு ஒருவர் நெருங்கி கும்பலாகிறது. அத்தனைக் கண்களிலும் சின்னச்சின்ன பொறிகள். அவை ஒட்டுமொத்தமாய் மனிதத்தீயாகி, அந்த மலைக்காடு முழுவதும் வியாபிக்கிறது. கரிக்கட்டையாய் போன பார்வதியும், மீண்டும் ஒரு சிறு பொறியாகி, அந்த மனிதத்தீயில் சங்கமிக்கிறாள்*